3rd November 1958]

SRI A. A. RASHEED : Is there any proposal to empower M.L.As. to report against lorry drivers when they exceed the speed limit?

THE HON. SRI V. RAMAIAH : As I have stated, I have requested all Gazetted Officers to look into this matter but they have not yet taken full interest in the matter. Therefore, let me first find out whether I can speed up the matter as far as the Gazetted Officers are concerned, before I give effect to the suggestion of the hon. Member.

*Third-crop paddy cultivation*

* 797 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of the area under the third-crop paddy cultivation in the State;

(*b*) of this, the area in Tanjore district; and

(*c*) the areas that could be brought under third-crop paddy in the different districts of the State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The total area under third-crop paddy in the Madras State during 1956–57, for which figures are available, was 1,31,314 acres.

(*b*) The area in Tanjore district was 41 acres in 1956–57. The area in 1957–58 is reported to be 6,516 acres.

(*c*) No estimate could be given as the area will depend on the availability of water in the reservoirs.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபா நாயகர் அவர்களே, சில இடங்களில் குறிப்பாக நெல்லை மாவட்டம் போன்ற இடங்களில் மூன்றாம் போக சாகுபடிக்குத் தண்ணீர் கொடுத்த காரணத்தினால், இரண்டாவது போக பயிர்கள் தண்ணீர் இல்லாமல் நாசமாகிவிட்டன என்பது சர்க்காருக்குத் தெரியுமா? இதைப்பற்றித் திட்டவட்டமான உத்தரவு ஏதாவது பிறப்பித்திருக்கிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வப்போது அவ்வாறு கவனித்து வேண்டிய உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. இரண்டாம் போக பயிருக்கு தண்ணீர் போதுமானதாக சப்ளை செய்து மூன்றாம் போகத்திற்கு விடும்போது சில விவசாயிகள் அதைப் புரிந்து கொள்ளாமல் தவறுதலாகப் பிரசாரம் செய்கிறார்கள்.

SRI D. S. AUTHIMOOLAM : திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரபரணி பாசனம் ஸ்ரீவைகுண்டம் பாசனத்தில் மூன்றாம் போக சாகுபடிக்கு தண்ணீர் சப்ளை செய்வதன் மூலம் மேலே உள்ள நிலங்களில் இரண்டாம் போக சாகுபடியே தடைபடுகிறது. இதுபற்றி அரசாங்கத்தாருக்குப் புகார்கள் வந்ததா? மூன்றாம் போக சாகுபடிக்குத் தண்ணீர் சப்ளை செய்வதற்கில்லை என்று இன்ஜினீயர்கள் சொன்னாலும் political pressure-ஆல் இங்கிருந்து விடவேண்டுமென்று ஆர்டர் போடுவதாக அங்கே சொல்லப்பட்டு வருவது சர்க்கார் காதுக்கு எட்டி இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்தில் மொத்தம் லட்சத்து முப்பத்தோராயிம் ஏக்கர்தான 1956–57ல் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்பட்டிருப்பதாகக் காணப்பட்டிருக்கிறது. அதில் திருநெல்வேலி ஜில்லாவில் 2,500 ஏக்கர்தான் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரச்சனை எழவில்லை.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவில் மூன்றும் போக சாகுபடி எல்லா இடத்திலும் செய்யப்பட்டதா?. அதன் பயன் என்ன? திருப்திகரமாக இருந்தால் இந்த ஆண்டும் அவ்வாறு அனுமதி அளிக்கப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சை ஜில்லாவில் 1957–58–ல் 6,516 ஏக்கர்கள்தான் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்படுகிறது. இன்னும் அதிகம் செய்திருக்கலாம். சில விவசாயிகள் அந்த வசதியைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. பயன்படுத்திக்கொண்ட விவசாயிகளுக்கு நல்ல பயன் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு இருக்கும் தண்ணீர் நிலைமையை ஒட்டித்தான் மூன்றும் போக சாகுபடியை அனுமதிக்காலாமா, இல்லையா என்று தீர்மானிக்கப்படும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தஞ்சை ஜில்லாவில் எத்தனை பேர் மூன்றும் போகம் சாகுபடி செய்யத் தயாராய் இருக்கிறார்கள் என்கிற பட்டியலை தயார் செய்துகொண்டு தண்ணீர் விட்டார்களா ? பயன் படுத்திக்கொள்ளுபவர்கள் கொள்ளட்டும் என்று தண்ணீர் விட்டார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சம்பந்தமாகக் கலெக்டர் ஒரு மகாநாட்டைக்கூட்டி எல்லா விவசாயிகளுக்கும் விளக்கிச் சொல்லி எவ்வளவு பேர் சாகுபடிசெய்ய வருவார்கள், எவ்வளவு தூரம் தண்ணீர் விட வேண்டும் என்பது தெரிந்தே தண்ணீர் விடப்பட்டது.

*Murder cases*

* 798 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58–ல் எத்தனை கொலைகள் சம்பந்தமாக போலீசில் எத்தனை கேஸ்கள் பதிவு செய்யப்பட்டன ?

(ஆ) எத்தனை குற்றப்பத்திரிகைகள் தாக்கல் செய்யப்பட்டன?

(இ) எத்தனை கேஸ்கள் தண்டனையில் முடிந்தன?

(ஈ) எத்தனை கேஸ்கள் நீதி மன்றத்தில் முடிவு பெருமல் உள்ளன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 792.

(*b*) 667.

(*c*) 339.

(*d*) 149.

SRI S. M. ANNAMALAI : இவற்றில் கட்சித் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு? காதல் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : எந்தெந்தக் காரணத்தினால் கொலை நடக்கிறது என்று முன்பு கேள்விக்குத் தெரிவித்திருக்கிறேன். இப்போது அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

*Wool*

* 799 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மாடுகள், ஆடுகளிலிருந்து ரோமங்கள் எடுக்கும் தொழிலானது எந்தெந்த ஜில்லாக்களிலே நடைபெற்று வருகின்றன?